## ஸ்ரீ குருப்யோ நம:

## <u>என்னுரை</u>

**ஹரி ஓம்!**

அனைத்து ஆத்ம சாதகர்களுக்கும் அடியேனின் அன்பு கலந்த நமஸ்காரங்கள்,

எல்லையில்லாத அந்த அகண்ட அறிவு எங்கும், எதிலும் ஆன்மாவாக வியாபித்திருக்கிறது. அத்தகைய ஆன்மா ஒவ்வொரு உடலுக்குள்ளேயும் அறிவாக இருந்துக் கொண்டு, உணர்வாக அனைத்தையும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது என்பதை இந்த உலகிற்கு எடுத்துக்கூற வந்த ஏராளமான ஞானிகளின் வரிசையிலே, வாழையடி வாழையாக வந்த குருவம்சா வழியிலே, ஹம்ஸ தியானத்திலே திளைத்திருக்கின்ற திவ்ய ஆச்சாரியர்கள் இந்த அகிலத்திற்கு இன்றும் அதை உபதேசித்துக் கொண்டிருக்கின்றார்கள்.

பொதுவாக **"நிறைகுடம் தளும்பாது, குறைகுடம் கூத்தாடும்"** என்பார்கள். அதுப்போல, எல்லையில்லாத அந்த அறிவை தன்னுள்ளே உணர்ந்து, அதுவாகவே ஆகி விடுகின்ற அத்தனை ஞானிகளும், ஒன்றும் அறியாத அப்பாவிகளைப் போன்றே அமைதியாக, ஆனந்தமாக அந்த அறிவில் இணைந்தவாறு இருந்துக் கொண்டிருக்கிறார்கள்.

இவர்கள் எல்லோருமே தன் சுயத்தில், தனித்து, தன்மயமாக மட்டுமே இருந்துக் கொண்டிருப்பார்கள். அத்தகையவர்களை இந்த உலகம் அவ்வளவு எளிதாக அறிந்துக் கொள்ள முடியாது.

அதிலே, எல்லையில்லாத அந்த பேருணர்வை, பேரறிவைத் தன்னுள்ளே உணர்ந்து, அனைத்து அத்வைத வேதாந்த - சித்தாந்த நூல்களையும், வேதபாடங்களையும் தக்க சத்குரு மூலம் சரியானபடி பயின்று, அவ்வாறு பயின்றவைகளை அனுபவமாக தன் வாழ்க்கையில் வாழ்ந்துக் காட்டிக்கொண்டு, **"யான் பெற்ற இன்பம் பெறுக இந்த வையகம்"** என்ற திருமூலரின் திவ்ய அனுபவத்தைப் போன்று, தன்னுள்ளே அந்த ஆனந்த அனுபவத்தை அனுபவித்துக் கொண்டிருக்கின்ற ஆத்ம ஞானியாகிய எனது அன்புக்குரிய மாணவர்களில் ஒருவரான ஆத்ம ஞானி **பராபரன்**என்ற ஆச்சாரியரை வேதாந்த, சித்தாந்த நூல்களின் வாயிலாக உங்களுக்கு அறிமுகம் செய்வதில் எல்லையில்லாத ஆனந்தத்தை அடைகிறேன்.

பொதுவாக, குரு என்பவர் மாணவனை இருளிலிருந்து, வெளிச்சத்திற்கு அழைத்துச் செல்பவர். அதாவது, அறியாமையிலிருக்கின்றவர்களை, அந்த அறிவாகவே நீங்கள் இருக்கின்றீர்கள் என்று சுட்டிக்காட்டுபவர்.

அத்தகைய சத்குருவின் சரியான உபதேசத்தை, சரியானபடி உள்வாங்கிய உயரிய மாணவர்களில் ஒருவரான இவர், அந்த குருவிற்கு மகிமை சேர்க்கின்ற மகத்தான பணியை ஆச்சாரியராக வந்து இந்த உலகத்திற்கு உரித்தாக்க வேண்டும் என்ற உத்தேசத்தில், பல்வேறு மொழிகளில் எழுதப்பட்ட பல மஹான்களின் பரிபாஸை நூல்களை எல்லோரும் எளிதாக புரிந்துக் கொள்ளும் வீதம், அழகிய தமிழ் மொழியில், எளிய உரை நடையில் உங்களுக்காக உரித்தாக்கி இருப்பது என்பது, அவரது உயர்ந்த உள்ளத்தை நமக்கு வெளிச்சம் போட்டு காட்டுகிறது.

எனவே, இவரது, இந்த அரிய ஆத்ம ஞான நூல்களை அனைவரும் பயின்று, அதன் பயனாக அந்த ஏக அறிவை அறிந்து, அதன் ஏகாந்த அனுபவ உணர்விலே என்றென்றும் ஆனந்தமாக இருப்பு கொள்ளுமாறு எல்லோரையும் கேட்டுக் கொள்கிறேன்.

**நன்றி**

**என்றும் அன்புடன்,**

**சுவாமி பிரபஞ்சநாதன்.**

## ஸ்ரீ குருப்யோ நம:

## <u>முகவுரை</u>

**ஹரி ஓம்!**

நம்முடைய ஸனாதனதர்மமான ஸாஸ்த்திரங்கள் கூறுவது, "மனிதன்" தன்னுடைய சுயத்திற்கு திரும்பவேண்டும், அதற்கான வழிகளை நமது ஸனாதன ரிஷிகள் ஸாஸ்த்திரங்கள் வாயிலாக எடுத்துறைத்துள்ளனர். அந்த ஸாஸ்த்திரங்களாவன வேதங்கள், உபநிடதங்கள், திருக்குறள், திருமந்திரம், திருவாசகம், பகவத்கீதை, மற்றும் பல நூல்கள்.

இந்த ஸாஸ்த்திரங்களை மனிதன் சான்றோர்கள் வாயிலாக "சிரவணம்", "மனனம்", "நிதித்யாஸனம்" (மனதை விசாரம்) செய்து உடல், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் அற்ற தூய உணர்வாகிய அகண்ட ஸச்சித்தானந்த சொருபமாகிய நிர்குணப்ரஹ்மமே "நான்" என்று உணர்வதே **<u>"ஆத்ம விசாரம் / தத்வ விசாரம் / சுய விசாரம்"</u>** என்பதாகும்,

ஏனெனில் மனித உடலுக்கு மட்டுமே ஆறாவது அறிவாகிய ப்ரத்யேக கருவியாக **<u>"மனம்"</u>** கொடுக்கப்பட்டுள்ளது. இந்த மனம்தான் தூயஉணர்வை அறிவதற்கான திறவுகோல்/சாவி என்றால் அது மிகையாகாது.

ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திரர், தான் பெற்ற உணர்வை/அறிவை பல பாடல்கள் வாயிலாக இந்த மானிட சமுதாயதிற்கு அளித்துள்ளார், அவற்றில் ஒன்று **"ஸர்வம் ப்ரஹ்ம மயம்"** என்ற பாடல்.

ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திரர் அவர்கள்**"ஸர்வம் ப்ரஹ்ம மயம்"** என்னும் இப்பாடலில் தன்னுடைய இருப்பை நன்றாக விளக்கியுள்ளார்.

இந்த **"ஸர்வம் ப்ரஹ்ம மயம்"** கருத்துக்களை, ஒரு தீரன்/முமக்ஷு நன்றாக படித்து, கருத்துக்களை உள்வாங்கி, மனதை விசாரம் செய்து தன்னுடைய சுயத்திற்கு திரும்புவதில் எவ்வித ஐயமுமில்லை.

இந்த படைப்புக்கு என்னை ஊக்குவித்து, உதவிய **"சுவாமி பிரபஞ்சநாதன்"** ஐயா அவர்களின் பாதத்தில் இப்பணியை சமர்ப்பிக்கிறேன்.

உன்னதமான இந்த **"ஸர்வம் ப்ரஹ்ம மயம்"** என்ற பாடலுக்கு தெளிவுரையை செய்ய எல்லாம் வல்ல இறையருளையும், குருவருளையும் வேண்டிப்பணிகிறேன்.

**நன்றி**

**அன்புடன்,**
**பராபரன்**

# ॥ஸர்வம் ப்ரஹ்ம மயம்॥

ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர் அவர்கள் 18 ஆம் நூற்றாண்டில், தமிழ்நாட்டின் கும்பகோணதிற்கு அருகில் வாழ்ந்த ஒரு துறவி, கர்நாடக இசையின் இசையமைப்பாளர் மற்றும் அத்வைத தத்துவஞானி ஆவார்.

அவரது சில இசையமைப்புகள் மட்டுமே எஞ்சியுள்ளன, அவை கர்நாடக இசையின் சிறந்த பாடல்களாக அங்கீகரிக்கப்பட்டுள்ளன.

அத்வைத தத்துவஞானியுமான ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராவின் பிரபலமான பாடல் **"ஸர்வம் ப்ரஹ்ம மயம்"**

இந்த பாடலில் அவர் தனது இருப்பை தெளிவாக விளக்கியுள்ளார்.

……………………………………………………………………………………………………………………………………………

**ஸம்ஸ்க்ருத பாடல் வரிகள்**

**ஸர்வம் ப்ரஹ்ம மயம் ரே ரே ||**
**கிம் வசநீயம் கிம் அ வசநீயம்**
**கிம் ரசநீயம் கிம் அ ரசநீயம் || 1**
**கிம் படநீயம் கிம் அ படநீயம்**
**கிம் பஜநீயம் கிம் அ பஜநீயம் || 2**
**கிம் போத்தவ்யம் கிம் அ போத்தவ்யம்**
**கிம் போக்தவ்யம் கிம் அ போக்தவ்யம் ||3**
**ஸர்வத்ர ஸதா ஹம்ஸ தியானம்**
**கார்தவ்யம் போ முக்தி நிதானம் ||4**
**ஸர்வம் ப்ரஹ்ம மயம் ரே ரே ||**

**தமிழ் மொழி பெயர்ப்பு**

**படைப்பு இறைவ(எ)ன் மயம் ரே ரே ||**
**எது பேசப்பட்டதோ எது பேசப்படாததோ**
**எது எழுதப்பட்டதோ எது எழுதப்படாததோ || 1**
**எது கற்கப்பட்டதோ எது கற்கப்படாததோ**
**எது பாடப்பட்டதோ எது பாடப்படாததோ || 2**
**எது கற்பிக்கப்பட்டதோ எது கற்பிக்கப்படாததோ**
**எது அனுபவிக்கப்பட்டதோ எது அனுபவிக்கப்படாததோ || 3**
**எல்லாவற்றிலும் எப்பொழுதும் ஹம்ச தியானம் (நான் அதுவாகவே இருக்கிறேன்)**
**இதுவே முக்திக்கு அழைத்துச் செல்லும் பாதை || 4**
**படைப்பு இறைவ(எ)ன் மயம் ரே ரே ||**

# **தெளிவுரை:**

## படைப்பு - பட விளக்கம்




இந்த படைப்பாகிய மநோசக்தியாகிய ஸகுண ப்ரஹ்மமாகிய நிர்குண ப்ரஹ்மம் தன்னை கீழ்கண்டவாறு வெளிபடுத்திக்கொண்டது:

1. சேதன வெளிப்பாடு
2. சூக்ஷ்ம வெளிப்பாடு
3. அசேதன வெளிப்பாடு
4. வெளி(ஆகாயம்) வெளிப்பாடு

## **சேதன வெளிப்பாடு:**

பஞ்சீகரணம் என்ற செயல்முறையால், பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் உடல்களை உருவாக்கிகொண்டு, உணர்வு தனது அறிவை சக்தியாகிய மனதின் வாயிலாக **வெளிப்பட்ட** நிலை **“சேதன”** வெளிப்பாடு என சாஸ்திரம் கூறுகிறது.

**குறிப்பு:** “பஞ்சீகரணம்” பற்றிய கூடுதல் விவரங்களுக்கு ஸ்ரீ பிரபஞ்சநாதன் ஐயா அவர்களின் பாடத்தைப் பார்க்கவும்.

படைப்பு
உயிரினங்கள்/சேதன வெளிப்பாடு
உணர்வு/அறிவு
சக்தி/மனம்
உபாதி/உடல்

| | சக்தி/மனம் | உடல்/உபாதி |
|---|---|---|
| உணர்வு | ஒரு அறிவு | மரங்கள், தாவரங்கள் |
| | இரண்டு அறிவு | புழுக்கள், பூச்சிகள் |
| | மூன்று அறிவு | பாம்பு, பல்லி, தவளை |
| | நான்கு அறிவு | பறவைகள் |
| | ஐந்து அறிவு | விலங்குகள் |
| | ஆறு அறிவு | மனிதர்கள் |

உணர்வான பேரறிவு அந்தந்த உடல்/உபாதிகளுக்கு ஏற்றவாறு தன்னுடைய அறிவை, சக்தியாகிய மனதின் வாயிலாக இப்படைப்பில் தன்னை ப்ரகாசிக்கிறது.

## சூக்ஷ்ம வெளிப்பாடு:

பஞ்சீகரணம் என்ற செயல்முறை இல்லாமல், உணர்வு தனது அறிவை, மனதின் மூலம் பஞ்ச பூதங்களாகவே **வெளிப்பட்ட** நிலை **“சூக்ஷ்ம”** வெளிப்பாடு என சாஸ்திரம் கூறுகிறது.

படைப்பு
ஸூக்ஷ்ம வெளிப்பாடு
உணர்வு/அறிவு
சக்தி/மனம்

Fire
Sky
Earth
Water
Air

| | சக்தி | வெளிப்பாடு |
|---|---|---|
| உணர்வு | ஆகாயம் | சப்தம் |
| | வாயு | சப்தம்+ஸ்பர்சம் |
| | அக்னி | சப்தம்+ஸ்பர்சம்+ரூபம் |
| | நீர் | சப்தம்+ஸ்பர்சம்+ரூபம்+ரசம் |
| | பூமி | சப்தம்+ஸ்பர்சம்+ரூபம்+ரசம்+கந்தம் |

உணர்வான பேரறிவு சக்தியாகிய மனதின் வாயிலாக, பஞ்ச பூதங்களாக இப்படைப்பில் தன்னை ப்ரகாசிக்கிறது.

## <u>அசேதன வெளிப்பாடு:</u>

பஞ்சீகரணம் என்ற செயல்முறையால், பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் உடல்களை உருவாக்கிகொண்டு, உணர்வு தனது அறிவை மனதின் வாயிலாக **<u>வெளிப்படாத</u>** நிலை **<u>“அசேதன”</u>** வெளிப்பாடு என சாஸ்திரம் கூறுகிறது [உதரணமாக: மணல், கல், சவம்].




உணர்வான பேரறிவு அந்தந்த உடல்/உபாதிகளுக்கு ஏற்றவாறு தன்னுடைய அறிவை, இருப்பாக இப்படைப்பில் தன்னை ப்ரகாசிக்கிறது.

## <u>வெளி(அகாயம்) வெளிப்பாடு:</u>

இடம்/ வெளி என்பது மனத்தில் **“ஏற்றிவைக்கபட்ட எண்ணங்கள்”** மட்டுமே, அது வெறும் பெயர்/நாமம் என சாஸ்திரம் கூறுகிறது, ஏனெனில் அது புலன்களுக்கும், மனதிற்க்கும் அப்பாற்ப்பட்தாக இருக்கிறது.

**“ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெரும் ஜோதி”** என்று வள்ளலார் கூறுகிறார்.

பிரபஞ்சத்தின் தொடக்கத்தையும் முடிவையும் இதுவரை யாராலும் விளக்க முடியவில்லை. விஞ்ஞானிகளோ - விண்வெளி தொடர்ந்து விரிவடைகிறது என்றே கூறுகிறார்கள்.

“எனவே வெளி என்பது உணர்வாக/இருப்பாக உள்ளது”,

இந்த படைப்பாகிய பிரபஞ்சம், உணர்வாகிய வெளியில் ஏற்றிவைக்கபட்டதே.




## படைப்பு என்பது உணர்வு, மனம், உடல் மூலம் வெளிப்பட்டது

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|---|
| உணர்வு | ✔ | ✔ | ✔ | ✔ | ✕ | ✕ | ✕ |
| மனம் | ✔ | ✔ | ✕ | ✕ | ✔ | ✕ | ✕ |
| உபாதி | ✔ | ✕ | ✔ | ✕ | ✔ | ✔ | ✕ |
| | வ்யக்தம் | வ்யக்தம் | வ்யக்தம் | அவ்யக்தம் | | | |

1 = உயிரினங்கள்/ சேதன வஸ்து (ஒரு அறிவு முதல் ஏழு அறிவு வரை)
2 = பஞ்ச பூதங்கள்
3 = உயிரற்ற பொருட்கள்/ அசேதன வஸ்து (கல்,மணல், சவம்)
4 = சத்/ இருப்பு நிலை
5/6/7 = உணர்வு இல்லாமல் ஒன்றுமில்லை - படைப்பு இல்லை.



பஞ்சபூத கலப்பு செயல்முறைக்கு உட்படாத ஒரு விதை "**அவ்யக்த"** நிலையில் உள்ளது, அது உணர்வு நிலையில் உள்ளது.

அதே ஒரு விதையை பஞ்ச பூதங்களோடு கலந்தால், அது ஒரு செடியாக வெளிப்படும், அது **"வ்யக்தம்/படைப்பு"** எனப்படும்.

## முடிவுரை:

| த்ரிபுடி | செயல்பாடு | உதாரணம் |
|---|---|---|
| பார்ப்பான் | உணர்வு | நான் **(சிவம்)** |
| பார்வை | மனம் | மனம் **(சக்தி)** |
| பார்க்கபடும் கருவி | உடல்/உபாதி | கண் **(உபாதி)** |
| **பார்ப்பான்+பார்வை+பார்க்கபடும் கருவி = படைப்பு** | | |

பார்ப்பானாகிய "நான்" இருப்பதினாலேயே, பார்வையாகிய சக்தி/மனம் மூலம், பார்க்கபடும் கருவியாகிய கண் மூலம், பார்க்கபடுவது படைப்பு நிகழ்கிறது, இதையே, **"சிவம் இல்லாமல் சக்தி இல்லை", "சக்தி இல்லாமல் சிவம் இல்லை"** என்றும், "**த்ரிபுடி"** என்றும் சாஸ்திரம் கூறுகிறது.

இந்த பாடலில் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர் தனது "இருப்பை" தெள்ளத் தெளிவாக விளக்கியுள்ளார், அது எப்படி எனில்:

**"ப்ரஹ்மமாகிய நான் இருப்பதினாலேயே" எது பேசப்பட்டதோ, எழுதப்பட்டதோ, கற்கப்பட்டதோ, பாடப்பட்டதோ, கற்பிக்கப்பட்டதோ, அனுபவிக்கப்பட்டதோ, இவைஎல்லாம், மனமாகிய சக்தியின் மூலமும், உடல் உறுப்புகள் மூலமும் உருவாக்கி படைத்துக்கொள்கிறேன்.**

**"ப்ரஹ்மமாகிய நான் இருப்பதினாலேயே" எது பேசப்படாததோ, எழுதப்படாததோ, கற்கப்படாததோ, பாடப்படாததோ, கற்பிக்கப்படாததோ, அனுபவிக்கப்படாததோ இவை எல்லாம் "என்னிடத்தில் உணர்வாகவேயிருக்கிறது".**

இப்படி மனதை நன்றாக விசாரித்த தீரன்/முமுக்ஷு/மோட்சத்தை விரும்பும் நபர், எல்லாவற்றிலும் எப்பொழுதும் (ஹம்ச தியானம் = நான் அதுவாகவே இருக்கிறேன்), இதுவே முக்திக்கு அழைத்துச் செல்லும் பாதை.

படைப்பு இறைவ(எ)ன் மயம் - இறைவன் மட்டுமே இருக்கிறார், **அது நான்தான்**!!!

# ஓம் தத் ஸத்

